# The Journal of
# The Tanjore Maharaja Serfoji's
# Sarasvati Mahal Library


EDITED BY

N. KANDASWAMY PILLAI,

*Honorary Secretary,*

*T. M. S. S. M. Library, Thanjavur.*



XXIV

No. 1

PUBLISHED ON BEHALF OF
THE ADMINISTRATIVE COMMITTEE OF THE LIBRARY

A. D 1970 Śaka 1892

**Annual Subscription Rs. 4**

# CONTENTS

The Journal of
The Tanjore Maharaja Serfoji's Sarasvati Mahal Library

Vol. XXIV A. D. 1970 Śaka 1892 No. 1.

# EDITORIAL

With this issue as the first number, we are introducing to our readers, the twenty-fourth volume of our Journal.

In our Tamil section, *Smṛti Candrikai*, a collection of the codes laid down in the Sanskrit originals of several Smṛtis on various topics, legal, social and ethical and the poem *Kāñjimannan Ammānai* are continued. The series of simple guides to rules of hygeine and health started with *Āyurvedopadeśa* is continued with a work entitled *Kuzhandai Parāmarippu*, dealing with the care of the child, as a sequence to the brochure on the subject of maternity, published in our last issue.

In our Marathi section, the Yakṣagāna play *Mohinī Maheśa Pariṇayam* by Rajah Serfoji is continued.

Our Sanskrit section, offers to our readers more variety than usual by including some short interesting pieces in addition to the continuation of the longer serials already on hand. Two more monographs on topics of *Pūrvamīmāmsa* entitled *Gurumatasaṅkṣepa* and *Vidhivicāra* are added under the series Pūrvamimāmsaguccha, the former completely and the latter to be continued and completed in the next issue. From the collections of poetical compositions of Mahākavi Śeshasayi of Kottayur, manuscripts of which were recently acquired by the Library, *Śārṅgadhara stuti* and *Sarasvatī stuti* appear in this issue, after the completion of *Komalāmbāstava*.

The literary *tour-de-force* following after this will, we hope, certainly entertain our readers and at the same time take them back to the memory of the great Maratha rulers of Thanjavur, Serfoji Raja and Thulaja Raja, who are celebrated therein and who patronized the poets of their time possessing such rare talents. Many such stray and small gems are found among our manuscripts, of which these are but specimens.

*Siddhānta Candrikā*, a lucid thesis on Advaita by *Śri Rāmānanda Sarasvati* with a commentary by *Sri Gaṅgādhara Sarasvati* is published here, continuing the series of short Advaita treatises.

The next instalment of the multi-lingual dance drama *Śaṅkara Kāli Naṭana Samvāda Nāṭaka* of Shaha Maharaja, coming as the last literary article in this issue, will be completed in our next issue. With this we wish our readers goodbye till we meet them through our next issue.

Thanjavur<br>7—9—70

N. KANDASWAMY,<br>*Honorary Secretary.*

பலர் கூடிப் பொய்ச்சான்றுரைத்தால், மேற்கூறிய தண்டங்களை அவர்களுக்குத் தனித்தனியே விதிக்க.

மனு

குணமில்லாத சான்றினனொருவனுயிருந்த விடயத்தில், சான்றுரைத்த ஏழுக்குள், பிணி முதலான துன்பம் காணப்படில், அச்சான்றினனுடைய மொழி பிரமாணமன்று.

சான்றினரைக் குறித்த தண்டங்களை; சான்றினருடைய குற்றங்களையும், குணங்களையும், தண்டத்தை விதிக்கின்ற வசனங்களையும் நன்ருக ஆராய்ந்து, தகுதிப்படி விதிக்க.

நாரதன்

ஒருவனுடைய சான்றினனை மற்றொருவன், உண்மையினின்று மாறுபடுத்த நினைத்து, அச்சான்றினனிடத்தில் மறைவிற் சென்ருலும், அவனைப் பேதித்தாலும், அவன் ஈனனைப்போல தண்டிக்கப்படுவான்.

காத்தியாயனன்

வாதியானவன், முதலிலே சொல்லுவித்த சமீபத்துச் சான்றினராலே தனக்குத் தோல்வியுற்றுப் பின்னர், தூரத்திலிருந்த குணவிசேடமுடைய சான்றினர் சொல்லுதலினுலே அவனுக்கு வெற்றியுற்ருல், அந்த முதற் சான்றினர் பொய்ச்சான்றினராவார்.

நாரதன்

ஆயுதம் கையில் இருப்பதால் ‘ இவன் கொலை செய்தவன் ’ என்றும், கன்னக்கோல் கையில் இருப்பதால் ‘ இவன் திருடன் ’ என்றும், மண்வெட்டி கையில இருப்பதால் ‘ இவன் கரையுடைத்தவன் ’ என்றும், கொள்ளி கையில் இருப்பதால ‘ இவன் நெருப்பிட்டவன் ’ என்றும், பெண்ணினுடைய மயிரைப் பிடித்தவனை, ‘ அயலவளை விரும்பினவன் ’ என்றும் சான்றில்லாமல் நிச்சயிக்கலாம். ஆனல், உடலில் காணப்படுகின்ற புண் முதலியவற்ருல் “ இவன் அடிக்கப்பட்டவன் ” என்று நிச்சயிப்பதை மிகவும் ஆலோசித்துச் செய்க.

முதற்பாகம் முற்றிற்று.

# இரண்டாம் பாகம்

—*—

## மனு

வேள்விச் செய்கை :—வேள்வி, துணையந்தணர் பலர் கூடிச் செய்யுங் காரியமாம்.

வேள்வியின் பொருட்டு, எசமானனாலே வரிக்கப்பட்டவர்களாகி, நியமிக்கப் பட்டபடி, [1] அத்துவரியு முதலான நால்வகைக் கணத்தாரும், தங்கள் தங்கள் காரியங்களைச் செய்க.

அந்த நால்வகைக் கணத்தாருக்கும், எசமானனாலே சமுதாய [2] தக்ஷிணை யன்றி, விசேட தக்ஷிணையாகக் கொடுக்கப்பட்ட தேரினை அத்துவரியும், [3] வெள்ளைப் பரியினைப் பிரம்மாவும், வெள்ளைவால் பரியினை ஓதாவும், [4] பண்டியை உற்காதாவும் முறையே கொள்க.

சமுதாய தக்ஷிணையை நூறு பங்காக்கி, அவற்றுள் நாற்பத்தெட்டு பங்கை முதற்கணத்தினர் நால்வரும் சமமாகக்கொள்க; மிகுந்த பன்னிரண்டு பங்கை, நாலாங்கணத்தினர் நால்வரும் சமமாகக்கொள்க.

வேள்விக் காரியம் செய்யும்பொழுது, ஒருவன் தனது காரியத்தைவிட்டு நீங்க விரும்பினால், அவன் தன்னுடைய காரியத்தை அன்னியனாலேனும், தான் இருந்த கணத்தாருள் ஒருவனாலேனும் முடிப்பித்துத் தனக்குள்ள தட்சிணையை அடைக.

அவருள் ஒருவன் இறந்துபோனால், அவன் ஒப்புக்கொண்ட காரியத்தை, அவனுடைய கோத்திரத்தானேனும் முடித்து, அவனுடைய பாகத்தையடைக.

சம்பந்தமுடையவர் இல்லாவிடில் வேள்விக்கு எசமானன், வேறொருவனை நியமித்து, அந்தக் காரியத்தைப் முடிப்பித்து, அந்தப் பாகத்திலே அவனுக்குச் சிறிது கொடுத்து, மிகுந்ததை முன்பு காரியத்தை ஒப்புக்கொண்டவனுக்கே கொடுப்பது.

## பிரகற்பதி

கூத்துச்செய்கை:—நட்டுவன் முதலானவர்கள் பலர்கூடிச் செய்யுங் காரியமாம்.

நடனத்தொழிற் கூட்டத்தாருள் தலைவன் இரண்டு பாகமும், தாளக்காரன் ஒன்றரை பாகமும், ஏனையோர் சமபாகமும் கொள்க.

திருட்டுச்செய்கை :—திருடர் பலர்கூடிச் செய்யுங்காரியமாம்.

---

1. வேள்விப்புரோகிதர். 2. காணிக்கை. 3. வெள்ளைக்குதிரை. 4. வண்டி.

சோரக்கூட்டத்தார், தலைவனுடைய அனுமதி பெற்று, வலியவனுன பகைவன் தேசத்தில் சென்று கவர்ந்துகொண்டு வந்த பொருளில், அரசனுக்கு ஆறில் ஒரு பங்கும், தலைவனுக்கு நாலில் ஒரு பங்கும், சூரனுக்கு மூன்றில் ஒரு பங்கும், திறமுடையவனுக்கு இரண்டில் ஒரு பங்கும், கொடுத்து மிகுதியைச் சமமாகக் கொள்க.

### காத்தியாயனன்

எளியவனுன பகைவனுடைய தேசத்திற்சென்று, கவர்ந்துகொண்டு வந்த பொருளிலேயெனில், அரசனுக்குப் பத்தில் ஒரு பங்கு; ஏனையோருக்குப் பாகம் முன் சொன்னபடியே.

அந்தக் கூட்டத்தாருள் ஒருவன் பகைவனிடத்து அகப்படின், அவனை மீட்பதற்காகக் கொடுத்த பொருளை, அந்தக் கூட்டத்தார் எல்லோருஞ் சமமாக ஒப்புக்கொள்க.

பங்கு ஏற்பாடு செய்யாமற் கூடித் தொழில் செய்கின்ற வணிகர், உழவர், சிற்பர், திருடர் இவர்களுக்கும் இவ்விதியே கொள்க.

---

## நல்கியதை நல்காமை

—o—

### பிரகற்பதி

நல்கியதை நல்காமை:— கொடுக்கத்தகாத பொருளும், கொடுக்கத் தக்க பொருளும், கொடுக்கப்பட்ட பொருளும், கொடுக்கப்படாத பொருளுமென நால்வகைப்படும்.

### அவற்றுள்

கொடுக்கத்தகாத பொருள்:— பலருக்கும் பொதுவாகிய வழி, நிலம், முதலான பொருளும், புதல்வரும், மனைவியரும், ஈடாக வைத்த பொருளும், அயலவனுக்குக் கொடுக்கப் பிரதிக்கினை பண்ணப்பட்டாலும் சந்ததியுடையவனது எல்லாப் பொருளும், [1]நியாசப் பொருளும், இரவற்பொருளும், வாக்குத்தத்தம் பண்ணின பொருளும், [2]நிட்சேபப் பொருளும், சீதனப் பொருளுமாம்.

இப்படிச் சொல்லப்பட்ட கொடுக்கத்தகாத பொருளைக் கொடுத்தவனும், வாங்கினவனும் தண்டிக்கப்படுவார்கள்.

கொடுக்கத்தகாத பொருள் கொடுக்கப்பட்டால் அரசன் அந்தப் பொருளை வாங்கிப் பொருளுடையவனுக்குக் கொடுக்க.

---

1. வைப்புப்பொருள். 2. புதையல் பொருள்.

## நாரதன்

கொடுக்கத்தக்க பொருள் :— குடும்பம் காத்தற்குமேல் அதிகமாய் இருக்கிற தனம், தானியம் முதலான பொருள்களாம்.

இந்தப் பொருள், பூாகும் செய்து கொள்ளாதவர்களாயேனுமிருக்கிறவர்களாலே கொடுக்கப்படலாம்.

## பிரகற்பதி

தலைவருடைய அனுமதி இருந்தால், விவாகத்தில் வந்த பொருளையும், பாட்டன் முதல் முறைப்புருடரிடத்தினின்று வந்த பொருளையும், [1]சௌரியத்தால் அடைந்த பொருளையும், கொடுக்கலாம்.

தானே சம்பாதித்த பொருளை, தலைவருடைய அனுமதி வேண்டாமலே கொடுக்கலாம்.

ஈட்டுப்பொருளைத் தன்னுடையதானபோது கொடுக்கலாம்.

## வசிட்டன்

கணவனுக்குப்பின்பு மனைவியானவள் கொடுத்தலும், வாங்கலும் செய்தல் கூடாது.

கொடுக்கத்தக்க புத்திரனை, வாங்கிக்கொள்பவன் வாங்கிக்கொள்ளும் பொழுது, அரசனுக்கு அறிவித்து, சுற்றத்தார் எதிரிலே, வீட்டின் நடுவில் ஓமம் செய்து, விதிப்படி வாங்கிக்கொள்க.

## யாக்ஞவல்கியன்

ஒருவன் கொடுக்கத்தக்கனவாகிய, அசைக்கப்படு பொருளையுங் கொடுக்கும் போது, சான்றினர் முதலானவர்கள் அறிய விளக்கமாகக் கொடுக்க.

ஒருவன், வாக்குத்தத்தம் பண்ணின பொருளைக் கொடாமற்போனாலும், கொடுக்கப்பட்டதை மீண்டும் கொள்ள விரும்பினாலும், அவன் பாவியாவான்; தண்டத்தையும் அடைவான்.

## ஆரிதன்

ஒருவன், வாக்குத்தத்தம் பண்ணின பொருளைக் கொடாவிடில், அந்தப் பொருள் கடன் பொருளைப்போல, அவனை இம்மையிலும், மறுமையிலும் தொடரும்.

அவன் பலவகையான நரகங்களையடைந்து, நாய் முதலிய இழிவான பிறப்பையடைவான்.

---

1. வீரத்தால்.

## கௌதமன்

தருமம் தவ்றி நடக்கின்ற அந்தணன் பொருட்டு, வாக்குத்தத்தம் பண்ணின பொருளைக் கொடாதவன் குற்றமுடையவனல்லன்.

கொடுக்கப்பட்ட பொருள் :— சரக்கின் விலையாகக் கொடுக்கப்பட்டதும், தெரியாத காரியத்தைத் தெரிந்துகொள்வதற்காகக் கொடுக்கப்பட்டதும் உவப்பினுலே புகழ்வோன் முதலானவர்களுக்குக் கொடுக்கப்பட்டதும், இடத்தினுலே புதல்வியர் முதலானவர்களுக்குக் கொடுக்கப்பட்டதும், பயம முதலான ஆபத்துக்காலத்தில அதைக்குறிததேனும், காரிய உதவி செய்ததைக் குறித்தேனும் கொடுக்கப்பட்டதும, கலியாணத்தின் பொருட்டுக் கன்னிகையின் [1]ஞாதி முதலானவர்களுக்குக் கொடுக்கப்பட்டதும், இரக்கத்தினுலே தாய், தந்தை, குரு, [2]மித்திரன், வணக்கமுடையவன், எல்லார்க்கும் உபகாரஞ் செய்பவன், எளியவன், அனுதன், நல்லொழுக்கம் உடையவன் இவர்களுக்குக் கொடுக்கப்பட்டதும், சிரத்தையினுல் புண்ணியத்தின் பொருட்டு கொடுக்கப்பட்டதும் என எண்வகைப்படும்.

## காத்தியாயனன்

பிராணுபத்தை அடைந்தவன், தன்னைக் காத்தவனுக்கு, 'எல்லாப் பொருளையும் கொடுக்கிறேன்' என்று வாக்குத்தத்தம் பண்ணினுலும் அது சொன்னபடி சித்தியாது.

## நாரதன்

கொடுக்கப்படாத பொருள் :— பயத்தினுலே காவலாளருக்குக் கொடுக்கப்பட்டதும், பிரிக்கப்படாத பொருளைத் தாயாதிகளுக்குக் கொடுக்க ஒப்பாமற் கோபத்தினுலே அன்னியருக்குக் கொடுககப்பட்டதும், ஒருவன் மிகுந்த துக்கத்தினுலே, இந்தப் பொருளாலே நமக்கென்ன பயனென்று சலிப்புற்றபோது, அந்தச் சலிப்பினுலே கொடுக்கப்பட்டதும், திருட்டு, வன்செய்கை, பொல்லாத காரியம், அயலவன் மனைவியைப் பற்றுதல் இவற்றைச் சொல்லுகிறவனுக்கும், மறைந்தோடிப் போனவனை வெளிப்படுத்துகிறவனுக்கும், காரியஞ்செய்யாதவனை 'இவன் நன்ருகக் காரியம் செய்கிறவன' என்று எசமானனிடத்தில் சொல்லுதற்காக ஒருவனுக்குக் கொடுக்கப்பட்டதுமாகிய கைக்கூலிப்பொருளும், பரியாசத்தினுலே கொடுக்கப்பட்டதும், ஒருவன், தான் மீட்டும் வாங்கிக்கொள்ளுகிற பொருளை அயலவர் கொண்டாடும்படி சபையில் ஒருவனுக்குக் கொடுத்ததும், இளமையனுலே கொடுக்கப்பட்டதும, இன்னுனுக்கிதுவென்கிற நிச்சயமில்லாமல் வேருெருவனுக்குக் கொடுக்கப்பட்டதும, உரிமையின்மையராகிய அடிமை முதலானவர்களாலே கொடுக்கப்பட்டதும், நோயால் வருத்தமுற்றவனுலே கொடுக்கப்பட்டதும்,

1. தந்தை. 2. நண்பன்.

ஊமத்தங்காய் முதலானவைகளைத் தின்று, மயக்கமுற்றபோது கொடுக்கப் பட்டதும், வேலையை ஒப்புக்கொள்ளும்பொருட்டு வேலையாளனுக்கு உபகாரமாகக் கொடுக்கப்பட்டதும், ஒருவன் இந்தப்பொருளை இவனுக்குக்கொடுத்தால், நமக்கு இலாபம் கிடைக்கும் என்று எண்ணி, இலாபத்தை உண்டாக்கர்தவனுக்குக் கொடுத் ததும், தகுதி இல்லாதவனைத் தகுதியுடையவன் என்று சொன்னதினாலே அவனுடைய சொல்லை நம்பிக்கொடுத்ததும், அதருமமாகச் சிலவழிக்கிறவனைத் தருமமாகச் சிலவழிக்கிறவன் என்று சொன்னதைக்கேட்டுக் கொடுத்ததும், [1]நபுஞ்சன், மிகவும் [2]விருத்தன், [3] அவதூதன், [4]சன்னியாசி இவர்களாலே கொடுக் கப்பட்டதுமாம். இந்தப் பொருள்கள மீட்டுக்கொள்ளத் தக்கனவாம்.

## காத்தியாயனன்

ஒருவன் தனக்குக் காரியஞ் சித்திக்கிற நிமித்தம், கைக்கூலி கொடுக்க வாக்குத்தத்தம் பண்ணினாலும், அது கொடுக்கத் தக்கதன்று. முன்னாகக் கொடுத்திருந்தால், அதனை, அரசன் வாங்கிப் பொருளுடையவனுக்குக் கொடுக்கும் படிச் செய்க.

கைக்கூலி வாங்கினவனுக்கு, அந்தக் கைக்கூலிப் பொருளுக்குப் பதினொரு மடங்கான பொருளைத் தண்டமாக விதிக்க.

கைக்கூலி கொடுத்தவனுக்குத் தண்டமில்லை; கொடுப்பித்தவனுக்குத் தகுதியான தண்டம் விதிக்கப்படும்.

நோயாற் பீடிக்கப்பட்டவன், தரும காரியத்தின் பொருட்டு வாக்குத்தத்தம் பண்ணின பொருளைக் கொடாமல் இறந்துபோனால், அந்தப் பொருளை அவனுடைய புத்திரன் கொடுக்கவேண்டும்.

## மனு

வேள்வி முதலான தரும காரியத்தைச் செய்வதற்காகப் பொருளை இரந்து வாங்கினவன், அந்தக்காரியத்தைச் செய்யாமல், மதத்தினாலேனும், பொருளாசை யாலேனும், ‘அந்தக் காரியம் செய்தேன்’ என்று பொய் சொன்னால், அரசன் அவன் இரந்து வாங்கின பொருளையும், அந்தக் குற்றத்திற்குத் தண்டமாக ஒரு பொன்னையும் அவனிடத்தில் வாங்குக.

## நாரதன்

கொடுக்கப் படாதனவாகிய பொருள்களைக் கொடுத்தவனும் தண்டிக்கப் படுவான்.

நல்கியதை நல்காமை முற்றிற்று

---

1. அலி. 2. கிழவன். 3. ஆத்மஞானி. 4. துறவி.

## ஒப்பிப் பணிசெய்யாமை

---

### நாரதன்

பணிசெய்பவர் :— உயர்வான பணி செய்பவரும், இழிவான பணி செய்பவருமென இருவகையர்.

### அவருள்

உயர்வான பணிசெய்பவர் : மாணுக்கரும், அணித்துறைவோரும், வேலையாளரும், வேலைத் தலைவருமென நால்வகையர்.

இழிவான பணி செய்பவர் வீட்டடிமை முதலான பதினைவர்.

இவ்விருவகையாருக்கும் உரிமை இல்லை.

மேற்கூறிய நால்வகையருள்: மாணுக்கரென்பவர், இருபிறப்பாளரும், வசந்தகாலத்திற் செய்யப்பட்ட உபநயனம் முதலானவைகளை உடையவருமாகி இருப்பவர்.

அவர், குருவிடத்திலே பிச்சை அன்னம் புசித்துக்கொண்டும், குருவுக்கும், அவருடைய பத்தினிக்கும், புத்திரனுக்கும், இழிவல்லாத பணிவிடை செய்துகொண்டும், இருக்குவேதம் முதலான வேதங்களைக் கற்று, [1]சமாவர்த்தனஞ் செய்தவுடனே, குருதட்சிணை கொடுத்து வணங்கி, அவரிடம் விடை பெற்று நீங்கித் தமது வீட்டை அடைக.

அணித்துறைவோரென்பவர் : சிற்ப சாத்திர ஞானம் உண்டாகும் பொருட்டும், பொன், மணி இவை முதலியவற்றைச் சேர்ந்த வேலைகளிலும், [2]தாம்பிரம் முதலான உலோக வகைகளைச் சேர்ந்த வேலைகளிலும், நாட்டியம், கீதம் இவை முதலியவற்றைச் சேர்ந்த வேலைகளிலும், கைவல்லமை உண்டாகும் பொருட்டும், ஆசாரியனிடத்தில், அவன் ஏற்படுத்திய கால அளவு வரையிலும், அவனுடைய வீட்டில் அன்னம் புசித்துக்கொண்டு, அவன் சொன்னபடி, [3]கங்கணம் [4]கடகம் செய்தல் முதலான வேலைகளைச் செய்துகொண்டிருப்பவர்.

ஆசாரியன், அவ்வணித்துறைவோருக்கு வேலை கற்பித்து, அவரை [5]சிட்சித்து, தன் புத்திரனைப்போல் நடப்பிக்க. ஆசாரியன், அவர்களுக்குச் சிற்ப வேலையிடாமல் வேறு காரியங்களைக் கற்பித்தால், அவ்வாசாரியனுக்குப் பூருவ சாகசதண்டம் விதிக்கப்படும்.

அவ்வணித்துறைவோர், கிரமம் தப்பி நடக்கின்ற ஆசாரியனை விட்டு நீங்கலாம். அணித்துறைவோர் ஓடிப்போனுல், ஆசாரியன் அவரைப்பற்றியிழுத்து, அடித்துக் கட்டிவைத்துத் தன்னிடத்திலிருக்கும்படிச் செய்க.

---

1. வேதங்களைக் கற்று முடிந்த பின்னர், செய்யவேண்டிய சடங்கு. 2. செம்பு. 3. கைவளை. 4. முழங்கைக்கு மேலே அணியும் வளை. 5. திருத்திக் கற்றுக்கொடுத்து.

அவ்வணித்துறைவோர், ஆசாரியன் ஏற்படுத்திய காலத்துட் சிலகாலத்திற்குள் வேலை கற்றுமுடிந்தால், குறைகாலம் செல்லுமளவும், ஆசாரியனிடத்தில் இருந்து, அந்த வேலையாற்கிடைத்த பொருளை, அவனுக்குக் கொடுத்து, அந்தக் காலமுழுதும் சென்ற உடனே தனது சத்திக்குத் தக்கபடி, ஆசாரியனைப் பூசித்து வணங்கி, அவனிடத்தில் விடைபெற்று நீங்குக.

### பிரகற்பதி

வேலையாளர் :— பெண்கூலிக்காரர், பொருட்கூலிக்காரர், போகக்கூலிக்காரர் என மூவகையர்.

### அவருள்

பெண்கூலிக்காரரென்பவர் : எசமானன் வீட்டு அடியாளைக் கலியாணம் பண்ணிக்கொண்டு, அவளையே கூலியாகக்கொண்டு, அவ் எசமானனிடத்தில் வேலை செய்பவர்.

பொருள்கூலிக்காரரென்பவர் : எசமானன் கொடுக்கும் பொருளையே கூலியாகக்கொண்டு, அவ் எசமானனிடத்தில் வேலை செய்பவர்.

போகக்கூலிக்காரரென்பவர் : பயிரின் பலத்தையும், பசுவின் பலத்தையும், கூலியாகக்கொண்டு எசமானனிடத்தில் வேலை செய்பவர்.

### அவருள்

ஆயுத சேவகர் உத்தமர் ; உழவுச்சேவகர் மத்திமர் ; சுமை சுமத்தல், [1] சோறடல் இவை முதலான வீட்டுவேலை செய்பவர் அதமர். வேலைத்தலைவரென்பவர் : வேலைக்காரரை நியமித்து, அவர்களாலே வீட்டு வேலைகளையும், வெளிவேலைகளையும் செய்வித்துக்கொள்பவர்.

---

## அடிமையர் விளக்கம்.

### நாரதன்

அடிமையர், வீட்டடிமை முதலிய பதினைவர்.

### அவருள்

1. "வீட்டடிமை" என்பவன், வீட்டடியாளிடத்தில் பிறந்தவனும்.
2. "விலையடிமை" என்பவன், விலையாற் கொள்ளப்பட்டவனும்.

---

1. சோறு சமைத்தல்.

3. "அடையடிமை" என்பவன், தானம் வாங்குதல் முதலியவற்ருல் வாங்கப்பட்டவனும்.

4. "தாய அடிமை" என்பவன், விபாகத்திலே பாகப்படி வந்தவனும்.

5. 'அனுகால பிருதன்' என்பவன், கொடுமையான காலத்தில் காக்கப்பட்டவனும்.

6. 'ஈட்டடிமை' என்பவன், தனிகனிடத்தில் ஈடாக வைக்கப்பட்டவனும்.

7. 'கடன் மீளடிமை' என்பவன், தனது கடனைத் தீர்த்தற்பொருட்டு அடிமையானவனும்.

8. 'போரில் கிடைத்தவன்' என்பவன், போரிலே வென்றதினுற் கொள்ளப்பட்டவனும்.

9. 'பணசிதன்' என்பவன், அடிமையாகுகையைத் தானே ஓட்டமாகச் செய்யப்பட்ட சூது முதலியவற்ருல், வெல்லப்பட்டவனும்.

10. 'தானுமடிமை' என்பவன், 'நானுனக்கு அடிமை' என்று வந்தவனும்.

11. 'துறவுகெட்ட அடிமை' என்பவன், துறவு நிலை தவறி அடிமையானவனும்.

12. 'செய்யப்பட்ட அடிமை' என்பவன், 'நீ இவ்வளவு காலம் எனக்கு அடிமையாய் இரு' என்று அடிமையாகப் பண்ணப்பட்டவனும்.

13. 'சோற்றடிமை' என்பவன், தானுண்ட சோற்றின் விலைக்காகக் கால அளவை ஏற்படுத்தி வேலை செய்பவனும்.

14. 'வடவாபிருதன்' என்பவன், ஒருவன் வீட்டடியாளைக் கலியாணம் பண்ணிக்கொண்டு, அவளுடைய எசமானனுக்கு அடிமையானவனும். [2]

### காத்தியாயனன்

அந்தணனை அந்தணன் அடிமையாகக் கொள்ளுதல் கூடாது.

### மனு

சத்திரியனும், வைசியனும், வேறு கதி இல்லாத காலத்தில் அடிமை ஆகலாம்.

### காத்தியாயனன்

[1]அனுலோம கிரமத்திலே அடிமையாகலாம்.

---

1. உயர்குல, தாழ்குல வரிசையிலே. 2. பதினுன்கே உள்ளன; பதினைந்து இல்லை.

## அடிமையர் செய்கை

—o—

வீட்டு வாசல், தெரு, அசுத்தமான இடம் இவற்றைத் துடைப்பதினாலே விளக்குதலும், சரீரத்தில் மறைக்கத்தக்க இடத்தைச் சொறிதலும், எச்சில், மலம், [1]சலம் இவைகளை வாரிக்கொட்டுதலும், [2]செளசம் முதலிய இழிவான காரியங்களைச் செய்தலும் ஆம்.

### நாரதன்

மேற்சொல்லிய அடிமையர் பதினைவருள் துறவு கெட்ட அடிமை ஒன்றைத் தவிர, மற்றைய அடிமை எல்லாரும், தங்களை அடிமையாகக் கொண்ட எசமானனுடைய தயையினாலே, அடிமைத் தன்மையினின்றும் விடப்படுவார்கள்.

மேலும், புலி முதலியவற்றால் எசமானனுடைய உயிர்க்கு இறுதி நேரிட்ட ஆபத்துக்காலத்தில், அவ்வெசமானனைக்காத்தால், அவர்கள் அவனாலே அடிமைத் தனத்தினின்று நீங்கிப் புத்திரபாகத்தை அடைவார்கள்.

துறவு நிலைகெட்ட அடிமை சாகுமளவும் அரசனுக்கு மாத்திரம் அடிமையாவான். அவனுக்கு மீட்சி இல்லை. அவன் அந்தணனானால், அரசன், அவனுடைய நெற்றியில், நாய்க்கால் குறியிட்டுத் தேசத்தினின்றும் அவனைத் துரத்திவிடுக.

கடன் மீளடிமை, தன்னுடைய கடனுக்காக எசமானன் கொடுத்தபொருளை வட்டியுடனே எசமானனுக்குக் கொடுத்தால் மீள்வான்.

தானுமடிமை, போரிற்கிடைத்தவன், பணசிதன், இம்மூவரும், தங்கள் பொருட்டு வேறு மனிதரைக் கொடுத்தேனும், தக்க காரியஞ் செய்தேனும் மீளுவார்கள்.

செய்யப்பட்ட அடிமை, ஏற்படுத்திய கால முடிவிலே விடப்படுவான்.

அனாகாகபிருதனும், சோற்றடிமையும், தாங்கள் உண்ட சோற்றின் விலை கொடுத்தால் விடப்படுவார்கள்.

ஈட்டடிமை, தன்னை ஈடாகவைத்து வாங்கப்பட்ட பொருளைக் கொடுத்தால் விடப்படுவான்.

வடவாபிருதனென்பவன், எசமானன் வீட்டடியாளை விடுதலினால் விடப்படுவான்.

---

1. சிறுநீர். 2. சுத்தம் செய்தல்.

## யாக்ஞவல்கியன்

ஒருவன் வலிமையால் அடிமைகொள்ளப் பட்டாலும், திருடராலே கவரப் பட்டு, அடிமையாகும்படி விற்கப்பட்டாலும், ஈடாக வைக்கப்பட்டாலும், தானம் பண்ணப்பட்டாலும் அவனுக்கடிமைத்தன்மை இல்லை.

அவனை ஏற்றுக்கொண்டவன் விடாமற்போனால் அரசன் விடுவிக்க.

## காத்தியாயனன்

வீட்டடியாளை எசமானன் விரும்பி, அவளுக்குக் கர்ப்பம் உண்டானால், அந்தப் பிள்ளையோடும் அவள், அடிமைத்தன்மையினின்று நீக்கத்தக்கவளாவாள்.

எசமானன், அடிமையை அடிமைத்தன்மையினின்றும் ஒழித்துவிட நினைத்தால் அடிமையினுடைய தோளிலிருக்கிற நீர் நிறைந்த குடத்தை வாங்கி யுடைத்து, தான் கிழக்கு முகமாக நின்று, அட்சதை மலரோடு கூடிய சலத்தை, அவ் அடிமையின் தலையில் இரைதது ' அடிமை அல்லன் ' என்று மூக்கால் சொல்லி அவ்வடிமையை விடுக.

அப்படி விடப்பட்ட அடிமை, பிணைப்படுதல் முதலான எல்லாக் காரியங் களிலுந் தகுதியுடையவனாவான்.

மேற்கூறிய விதி எல்லாம் பெண்ணடிமைக்கும் கொள்க.

நான்கு வருணத்தாருள் [1]அனுலோம கிரமத்தில் அடிமையாகலாம்.

இரண்டாம் பாகம் முற்றிற்று

---

1. உயர்குல தாழ்குல வரிசை.

# மூன்றும் பாகம்

## கூலி கொடாமை

### நாரதன்

வேலைக்குக் கூலி ஏற்படுத்தி, கூலி கொடுப்பதற்குக் காலம் ஏற்படுத்தாத விடயத்தில், கூலியை மூன்று பங்காக்கி, வேலை தொடக்கத்திலொரு பங்கும், நடுவிலொரு பங்கும், முடிவிலொரு பங்குமாகக் கொடுக்க.

கூலியிவ்வளவென்றேற்பாடு செய்யாத விடயத்தில் வாணிகத்தொழிலில் வேலை செய்தவனுக்கு, இலாபத்திலும்; பசு காக்குந் தொழிலில் மேய்ப்பவனுக்கு அந்தப் பசுவில் பால் முதலியவற்றிலும்; பயிர்த்தொழிலில் அற்பமான வருத்தத்தி லுலே பயிர் செய்தவனுக்கு, அந்தப்பயிரின் பலத்திலும் பத்தில் ஒரு பாகம் கொடுக்க.

### பிரகற்பதி

உழவன், எசமானனுலே, உணவு, ஆடை, கொடுக்கப்பட்டவனுகி, மிகுந்த வருத்தப்பட்டுப் பயிர் செய்தால், அந்தப் பயிரின் பலத்தில் அவனுக்கு ஐந்திலொரு பங்கும்; உண்வு ஆடை கொடுக்கப்படாதவனுகி, மிகுத்த வருத்தப் பட்டுப் பயிர் செய்தால், அவனுக்கு மூன்றிலொரு பங்கும் கொடுக்க.

### மனு

கூலி ஏற்படுத்தப்படாமல், கப்பல் வியாபாரஞ் செய்கிற கூலிக்காரனுக்குக் கடலிலே சஞ்சரிக்கத்தக்க திறத்தினராயும், அந்தந்த தேசங்களிலே, அந்தந்த காலங்களில் நடக்கும் வழக்கம் தெரிந்தோராயுமிருக்கின்றவர்களால் ஏற்படுத்தப் பட்டதே கூலியாம்.

### யாக்ஞவற்கியன்

வாணிகத்தில் எசமானனுடைய அனுமதி இல்லாமல் வேலையாளன், இலாபத்தைக் குறைபண்ணினுல், அவனுடைய கூலியிலே, எசமானன் இச்சைப் படி அவனுக்குச் சில கொடுக்கப்படும்.

அந்த வேலைக்காரன் அதிக லாபமுண்டாகும்படி செய்தால், அவனுடைய கூலிக்கு அதிகமாகச் சில பொருள் அவனுக்குக் கொடுக்கப்படும்.

கூலிக்காரர் பலர்கூடி, கிணறு [1]கல்லுதல் முதலியவற்றைச் செய்யுமிடத்து,

---

1. தோண்டுதல்.

அந்த வேலை முடியாதபோது, அவரவர் வேலைக்குத் தகுதியாக நடுவர் சம்மதிப்படி கூலி கொடுக்கத்தக்கது.

அவர்களால் அந்த வேலை முடிக்கப்பட்டால் பேசினபடி கூலி கொடுக்கத் தக்கது.

### நாரதன்

வேலையாளர் தங்கள் வசப்படுத்தின காரிய சாதனங்களாகிய கலப்பை முதலியவற்றை, [1]உடையவரைப் போலச் சோர்வுறாமல் காக்கவேண்டும்.

### பிரகற்பதி

அவர்கள் சோர்வு செய்தாற் கூலி இழப்பர். வேலை செய்ய ஒப்புக்கொண்டு முன் கூலிவாங்கினவன், அந்த வேலை செய்யாவிடில், எசமானனுக்கு, அந்தக் கூலிக்கு இரட்டிப்புப் பொருளையும், தன்னுடைய சக்திக்குத்தக்கபடி, அரசனுக்குத் தண்டத்தையும் கொடுக்க.

### யாக்ஞவற்கியன்

முன்கூலி வாங்காதவன், தான் ஒப்புக்கொண்ட வேலையைச் செய்யாவிடில், எசமானனுக்கு மாத்திரம், தனக்குச் சொன்ன கூலிக்குச் சமமான பொருளைக் கொடுக்க.

### நாரதன்

அல்லது, எசமானன் கூலியைக்கொடுத்து வலிமையினாலே வேலையைச் செய்வித்துக்கொள்க.

### பிரகற்பதி

வலிமை செய்தும் செய்யாவிடில், அவனுக்கு இருநூறு [2]காருடாபணம் தண்டமாக விதிக்கப்படும்.

### மனு

வேலையாளன், ஒப்புக்கொண்ட வேலையிலே சிறிது குறைவாயிருப்பினும், அப்பொழுது அவனுக்குக் கூலிகொடுக்கத் தக்கதன்று.

அந்த வேலையாளன், பிணி முதலிய துன்பத்தால் வேலை செய்யாமற் காலதாமதமானாலும், அந்த வேலையை முடித்துக் கூலியையடைவான்.

---

1. உரியவரைப்போல.
2. கருடப்பறவைச் சின்னம் பொறிக்கப்பட்ட பணமாக இருக்கலாம்.

## நாரதன்

கால அளவை ஏற்படுத்தி வேலை செய்ய ஒப்புக்கொண்டவன், அந்தக் காலம் முடிவாகு முன்னமே செய்யாவிட்டால், அவன் கூலியிழந்து அரசனுக்கு நூறு பணம் தண்டமாகக் கொடுக்கக்கடவன்.

## விட்டுணு

வேலை செய்கிறவனை, எசமானன், வைதல முதலியவற்றால் வேலையை விட்டுப்போகும்படி செய்தால், அரசன், அவன் செய்த வேலைக்குள்ள கூலியைக் கொடுப்பிக்க.

## பல முனிவர்

எசமானனுடைய எருது முதலானவைகள் [1] இராசிக [2] தெய்விகங்களினாலும் திருடர்களினாலுமலலாமல் வேலையாளனுடைய சோர்பு முதலான குற்றத்தினாலே கெடுதியடைந்தால், அவற்றின் விலைக்குச் சமமாகவும், கொலைச்சந்தையினாலே கொடுமையான, அடித்தல் முதலிய செய்கையாற் கெடுதியடைந்தால் இரட்டிப்பாகவும், அந்த வேலையாளன் கொடுக்க.

## நாரதன்

பாக்குச்சுமை முதலானவை, சுமைகாரனுடைய சோர்வினாலே கெடுதியடைந்தால், அந்தச் சரக்கின் விலைக்குச் சமமான பொருளும்; அவனுடைய கெடுபுத்தியினாலே கெடுதியடைந்தால் இரட்டிப்புப் பொருளும் கொடுக்க.

## காத்தியாயனன்

சுமைகாரன், ஆயுத சேவகன், இவர்கள் முதலானவர்கள், வேறு கூலிக்காரன் முதலானவர்கள் கிடையாத விடயத்திலே பயண [3] விகாதம் பண்ணினால், அவர்கள் எசமானனுக்குத் தங்களுடைய கூலிக்கிரட்டிப்புப் பொருள் கொடுக்க.

## யாக்ஞவற்கியன்

சுமை சுமக்க ஒப்புக்கொண்ட கூலிக்காரன், பயணத்தொடக்கத்திலே, ஒப்புக்கொண்டபடி செய்யாவிடில், அவன், தனக்குச் சொன்ன கூலியில் ஏழில் ஒரு பங்கையும், பாதி வழிக்குட்பட்டவிடத்திலானால், நாலில ஒருபங்கையும் நடுவழியிலானால், கூலி முழுவதையும் எசமானனுக்குத் தண்டமாகக்கொடுக்க.

## பிரகற்பதி

எசமானனுடைய அனுமதியினாலே, வேலைக்காரன் எல்லையைக்கடந்து,

---

1. அரசாட்சியினால் ஏற்படுதல். 2. இயற்கையினால் ஏற்படுதல்.
3. தடைபண்ணினால்.

நிலத்தையுழுதல் முதலானவைகளைச் செய்தால், குற்றம் எசமானனுக்கேயாம், அந்த வேலைக்காரனுக்குத் தண்டமுமாம்.

### காத்தியாயனன்

இளைத்தேனும், நோயால் வருத்தமுற்றேனும் இருக்கின்ற வேலைக்காரனை, ஓரிடத்தில் வைத்து மூன்று நாளாயினும் காப்பாற்றாத எசமானனுக்குப் பூருவ சாகச தண்டம் விதிக்கப்படும்.

### பிரகற்பதி

எசமானன் வேலையைச் செய்வித்துக்கொண்டு கூலியைக் கொடாவிடில், அரசன் கூலியைக் கொடுப்பித்துக் குற்றத்திற்குத் தக்கபடி தண்டத்தை விதிக்க.

### விட்டுணு

ஒருவன் கால அளவை ஏற்படுத்தி வைத்துக்கொண்ட கூலிக்காரனை, அக்காலத்திற்குள்ளே தள்ளிவிட்டால் ,அவன் கூலிக்காரனுக்குக் கூலி முழுதுங் கொடுத்து ,அரசனுக்கு நூறு பணம் தண்டமாகக் கொடுக்க.

### யாக்ஞவற்கியன்

சரக்குப்பொதி முதலான சுமை சுமக்கும் வேலையை ஒப்புக்கொண்டவனைப் பயணம் ஆயத்தமாயிருக்கையில் எசமானன் தள்ளிவிட்டால், அவன் ஏற்படுத்தின கூலியில் ஏழில் ஒரு பங்கும், பாதி வழிக்கு உட்பட்டவிடத்தில் தள்ளிவிட்டால் கூலி முழுதும் கொடுக்க.

### விருத்தமனு

பாதி வழிக்குட்பட்ட விடத்திலே சரக்கு விற்கப்பட்டால், எசமானன் பேசின கூலியில் பாதி கொடுக்க.

### காத்தியாயனன்

சரக்குச்சுமை சுங்கக்காரனாலே தடுக்கப்பட்டாலும், அரசன் முதலானவர்களாலே கவரப்பட்டாலும, அவ்வழியினளவுக்குத்தக்க கூலியைக் கூலிக்காரன் அடைவன்.

### நாரதன்

ஒருவன் சரக்கைக் கொண்டு போவதற்காக எருது முதலானவைகளை வாடகைக்கு வாங்கிச் சரக்கைக்கொண்டு போகாவிட்டால், அவன், தான் சொன்ன வாடகையில் நாலில் ஒரு பங்கும்; கொண்டுபோய் பாதி வழியில் விட்டால் வாடகை முழுதும்; பாதிக்குட்பட்ட விடத்தில் விட்டால் அதற்குத் தக்க வாடகையுங்கொடுக்க.

### காத்தியாயனன்

ஒருவன் தனது காரியத்தின் பொருட்டு, [1]பண்டி, யானை, குதிரை, கழுதை முதலானவைகளையும், வீடு, கடை, [2]சலபாத்திரம், நெய்ப்பாண்டம் முதலானவைகளையும் வாடகைக்கு வாங்கிக்கொண்டு, அவைகளினாலே பயனை அடையாவிடினும், அவன், அவைகளை உடையவன்வசம் ஒப்புவிக்குமளவும் உள்ள வாடகையைக்கொடுக்க.

### நாரதன்

வாடகைக்கு வாங்கின நெய்ப்பாண்டம் முதலானவைகள் நெரிந்தேனும், உடைந்தேனும் போனால், வாங்கினவன் வேறு பாண்டம் முதலானவைகளையேனும், அவைகளுக்கு விலையையேனும், உடையவனுக்குக் கொடுக்க.

அன்னியனுடைய நிலத்தில் வீடுகட்டி, வாடகை கொடுத்துக் குடியிருந்தவன், அவ்விடம் விட்டுப் போகும்பொழுது, அவன், மரம் செங்கல் முதலானவைகளைக் கொண்டுபோகுக.

வாடகை ஏற்படுத்தாமல் வீடுகட்டிக் குடியிருந்தவன் போம்பொழுது, அந்த வீட்டின் மரம் முதலானவை நிலத்திற்குடையவனைச் சேரும்.

---

## விலைமாதர் விடயம்

### நாரதன்

வேசையானவள், ஒருவன் கொடுத்த [3]பணயத்தை வாங்கிக்கொண்டு, அவனை இச்சியாமற்போனால், அவள் வாங்கின பணயத்திற்கு இரட்டிப்பான பொருளை, அவனுக்குக் கொடுக்க.

பணயங்கொடுத்தவன், அவளை இச்சியாமற் போனால், அவன் அந்தப் பணயத்தை இழப்பான்.

நோயினள், மிகவும் முக்கியமான காரியத்தில் பகைப்புற்றிருப்பவள், இராசகாரியத்தில் இச்சையுடையவள், ஒருவனாலே வரிக்கப்பட்டவள், இவர்கள், தாங்கள் உடன்பட்ட புருடனைச் சேராவிடில் அபராதமில்லை.

ஒருவன், வேசையை அனுபவித்து பணயம் கொடாவிடினும்; பல், நகம் முதலானவைகள் மிகவும் அழுந்த அனுபோகித்தாலும், [4]பகம் அல்லாத இடங்களில் புணர்ச்சி செய்தாலும், பலரைப் புணரும்படி செய்தாலும், அவன் பணயத்திற்கு எண்மடங்கு பொருளை அவளுக்கும், அதற்குச் சமமான தண்டப் பொருளை அரசனுக்கும் கொடுக்கத் தக்கவனாவான்.

---

1. வண்டி. 2. தண்ணீர் பாத்திரம். 3. பொருத்தப்பணம். 4. பெண்குறி.

### புராணம்

வேசையானவள், ஒருவனிடத்தில் பணயம் வாங்கிக்கொண்டு, பொருளாசையால் மற்றொருவனை அனுபோகித்தால, அவள் முன்வாங்கின பணயத்தை, பணயங்கொடுத்தவனுக்கும், தண்டத்தை அரசனுக்கும் கொடுக்கத் தக்கவள்.

வேசையரிடத்தில் உண்டாகிற விவாதம், அவர்கள் வீட்டிலே இருப்பவர்களும், அவர்களையே கொண்டாடுவோரும், காமுகருமாகிய இவர்களாலே நிச்சயிக்கத்தக்கது.

---

## சாமிபால் விவாதம்

---

### பல முனிவர்கள்

பசுவுடையவனாலே கூலி ஏற்படுத்தப்படாத விடயத்தில், நூறு பசு மேய்க்கப்பட்டால் வருடமொன்றுக்கு [1]ஈனுத பசு ஒன்றும்; இருநூறு பசு மேய்க்கப்பட்டால் ஈன்ற பசு ஒன்றுடனே எட்டு நாளில் ஒருநாள், கறவைப் பசுக்களில் பத்துக்கு ஒன்றாக அதிகமாகக் கறக்கின்ற பசுவின் பாலும், மேய்ப்பவனுக்குக் கூலியாம். எல்லாத் தொகையிலுங் கூலி இப்படியே அறியத்தக்கது.

எருமை முதலானவைகளை மேய்ப்பவனுக்கும் இப்படியே கூலி ஏற்படுத்துக.

பாலில்லாவிடில், மேற்சொல்லிய பாலின் விலைப் பொருளைக் கூலியாகக் கொடுக்க.

### யாக்ஞவற்கியன்

மேய்ப்பவன், தன்வசம் ஒப்புவித்த [2]காலிகளை நாடோறுங் காலைப்பொழுதிற் கொண்டுபோய்ப் புல்லை மேய்ப்பித்து, நீர் குடிப்பித்து, மாலைப்பொழுதில் ஒன்றும் குறையாமல் ஒப்புவிக்க.

### மனு

மேய்க்கும் இடத்தில் திருடர், [3]கொம்பு, [4]காளம், [5]வேய்ங்குழல் முதலானவைகளால் ஒலி செய்து காலிகளைக் கவர்ந்து போனால், மேய்ப்பவன் குற்றமுடையவனல்லன்.

---

1. கன்று போடாத. 2. பசுக்கூட்டங்களை. 3. வளைவான ஊதுகுழல். இசைக்கருவி. 4. நீண்ட ஊதுகுழல் இசைக்கருவி. 5. புல்லாங்குழல், இசைக் கருவி, மூங்கிலாலானது.

### வியாசன்

காலிகள் இருக்கும் ஊர், நாடு, வீடு இவற்றிற்கு இடையூறு வந்தபொழுது, காலி நட்டமாயேனும், கவரப்பட்டேனும் போனால் அதைக்குறித்து மேய்ப்பவனுக்குக் குற்றமில்லை,

### பல முனிவர்கள்

புழு, புலி, திருடர், செந்நாய், [1] மலைமுழை, பள்ளம் முதலான மீண்டு வரக்கூடாத விடங்கள், இவற்றால் காலிக்கு ஆபத்து நேரிட்டால் மேய்ப்பவன், கூக்குரலிடுதல், எசமானன் சமீபத்தில் இருந்தால் அவனுக்கு அறிவித்தல், இவை முதலிய தன்னாலாகிய புருட முயற்சி செய்யாமற் சோர்வு முதலான குற்றமுற்றிருப்பின், அவன் கெடுதியடைந்த காலியின் விலையை எசமானனுக்கும், பன்னிரண்டரை பணம் தண்டத்தை அரசனுக்கும் கொடுக்க.

காலவசத்தால், காட்டிலே காலி இறந்துபோனால், அந்தக்காலியின் காது, தோல், வால் இவை முதலான அடையாளங்களை மேய்ப்பவன், எசமானனுக்குக் காண்பிக்க.

### காத்தியாயனன்

விளைநிலம், தோட்டம், புல்லிருக்கும் இடம், விறகுக்காடு, வீடு, [2]தொழுவம், இவ்விடங்களிலே காலி புகுமளவில், அவ்விடமுடையவன், புகுந்த காலி கன்றானால், அதன் காது முதலியவை பிடித்தலும்; பெரிய எருது முதலானவைகளானால் அடித்தலும், அவைகளைப் போக்குதற்குத் தக்கபடி செய்க.

அடித்தல் அதிகமானால் தண்டம் உண்டாம்.

காடு, ஊர், வழி, பெருவழி, வழிச்செல்வோர் தங்குமிடம், இவற்றிற்குச் சமீபமான பயிர் நிலங்களுக்கு, ஒட்டகம் எட்டிப் பார்ப்பதற்கும், பசு, குதிரை தாண்டுதற்கும் கூடாததாகவும்; பன்றி, நாய் இவற்றின் முகம் நுழைக்கத்தக்க [3] புழைகளில்லாததாகவும் வேலிகட்டுக.

வேலி கட்டின பயிர்களைக் காலிகள், மேய்ப்பவனாலே தடுக்கப்படாமல் மேய்ந்து அழித்தபோது, மேய்ப்பவன், தகுதியான தண்டத்தையும், காலியுடையவன் நிலமுடையவனுக்குப் [4]பலச் சேதத்தையும் கொடுக்கும்படிச் செய்க.

### யாக்ஞவற்கியன்

வேலியில்லாத பயிரை, மேய்ப்பவன் அறியாமல் காலி மேய்ந்தழித்தால் மேய்ப்பவனுக்குக் குற்றமில்லை.

---

1. மலைக்குகை. 2. மாட்டுப்பட்டி. 3. பொந்து. 4. பயிர் நாசம்.

### விஷ்ணு

அவன் அறிந்து அழிக்கப்பட்டால் தண்டம் விதிக்கப்படும்.

### கௌதமன்

வேலியிடத்தக்கவிடங்களிலே வேலியிடாமல், [1]இறைக் கூற்றுக்கு அழிவு செய்த நிலமுடையவன் தண்டிக்கப்படுவான்.

### யாக்ஞவற்கியன்

காலிகள் வேரறும்படிப் பயிரை மேய்ந்து, அழித்தால், காலியுடையவன், நிலமுடையவனுக்குப் பலச் சேதத்தையும், அரசனுக்குத் தகுதியான தண்டத்தையுங் கொடுக்க. மேய்ப்பவனுக்குத் தடி முதலியவற்றால் அடித்தல் தண்டமாக விதிக்கப்படும்.

பயிரை அழித்த காலி, இளமைப்பருவம் கடந்த கழுதை, ஒட்டகம், எருமை இவைகளானால் எட்டு [2]மாடமும், பசுவானால் நான்கு மாடமும், வெள்ளாடு, செம்மறியாடுகளானால், இரண்டு மாடமும் தண்டமாக விதிக்கப்படும்.

காலிகள், மேய்ந்தவிடத்திலே படுத்திருந்தால், மேற் சொல்லிய தண்டம் எல்லாம் விதிக்கப்படும்.

### சங்கலிகிதன்

இரவிலே, ஒரு பசு, மேய்ப்பவன் அறியாமல் ஒரு முகூர்த்தத்துக்குட்பட்ட காலத்திலே மேய்ந்தால் தண்டமில்லை.

கன்றீன்ற பத்துநாளைக்குட்பட்ட பசு, தேவாலயப் பசு, பெரிய எருது, சூலம் போட்ட பசு, அரசனுடைய யானை, குதிரைகள், இனந்தப்பி வந்த பசு, மீட்டும் இனந்தேடிப் போம பசு, ஒற்றைக் கண்ணுடையது, ஒற்றைக் கொம்புடையது, இடி, பாம்பு, புலி, நோய் இவற்றால் துன்பப்பட்ட பசு, இவற்றிற்குத் தண்டமில்லை.

கூலிகொடாமை முற்றிற்று

---

1. அரசாங்கவரி. 2. உருத்தெனப் பெயருடைய நாணயம்.

## உடையவனல்லான் விற்றல்

### பிரகற்பதி

'உடையவனல்லாதவன்' என்பவன், [1]அன்னுவாகிதம், [2]நியாசம், கவரப்பட்டது, ஈடாக வைக்கப்பட்டது, தப்பிப்போனதாகிய அயலவனுடைய பொருள், இவை முதலானவைகளை, வெளிப்படையாகவேனும், மறைவாகவேனும் விற்பவன்.

### நாரதன்

உடையவன், உடையவனல்லாதவனாலே விற்கப்பட்ட தனது பொருளை, எவனிடத்தில காண்கிறானோ, அவனிடத்தினின்றதனை அடைவான்.

உடையவன், தப்பிப்போனதும், கவரப்பட்டதுமாகிய தனது பொருளை, அரசனுக்கு அறிவித்துத் தானடைக.

உடையவன், அரசனுக்கு அறிக்கை செய்யாமற் பொருளைக் கொண்டு போனால், அவன் தண்டிக்கப்படுவான்.

உடையவன், தனது பொருளைக் கவர்ந்தவனிடத்திலேனும், தப்பிப்போய் எடுத்தவனிடத்திலேனும், கண்டபோது, அவர்களை இராசமனுடரைக்கொண்டு பிடிப்பதற்குக் காலதேசங்களொவ்வாவிடில், தானே அவரைப்பிடித்து அரசனிடத்திலேனும், அரசனுடைய மனுடரிடத்திலேனும் ஒப்புவிக்க.

அரசன், அவர்களைத் தண்டித்து, உடையவனுக்குப் பொருளைக் கொடுப்பிக்க.

### யாக்ஞவற்கியன்

உடையவனல்லாதவிடத்தில், அறியாமையினாலே வாங்கப்பட்ட பொருளை, வாங்கினவனிடத்தில், உடையவன கண்டு, அரசனுக்கு அறிவித்தபோது, அரசன் அப்பொருளின் விலையை விற்றவனாலே கொடுப்பித்து, விலைப்பட்ட பொருளை உடையவனுக்குச் சேரும்படி செய்து, விற்றவனைத் தண்டிக்க.

[3]அகாலத்தில் வாங்குதல், முதலான குற்றம் காணப்படில், விற்றவனும் வாங்கினவனும், சோரனைப்போல் தண்டிக்கப்படுவார்கள்.

வீட்டினுள்ளேனும், கிராமத்திற்கு வெளியிலேனும், அகாலத்திலேனும், தகுதியுடையரல்லாத ஜனரிடத்திலேனும், இரகசியமாகவேனும், தாழ்ந்த

---

1. ஒப்படைக்கப்பட்டது. 2 அடகுவைக்கப்பட்டது.

3. இராத்திரி முதலான (காலமல்லாத) காலத்தில்.

விலையாலேனும், உடையவனனுமதி இல்லாமலேனும், அடிமை முதலிய உரிமையின்மையரிடத்திலேனும் கொள்ளப்பட்டது, குற்றமுடையதாகும்.

## காத்தியாயனன

பொருட்கெடுதியடைந்தவன், தன்னுடைய பொருளை, அயலவனிடத்தில் கண்டபோது, ஆகமாதிகளினாலும், சான்றினராகிய [1]ஞாதிகளினாலும், அப்பொருள் தன்னுடையது என்பதைச் சாதிக்க.

## பிரகற்பதி

அப்படிச் சாதித்த பின்பு, அந்தப் பொருளை விலைக்கு வாங்கினவன், தனக்கு விற்றவனைக் காண்பிக்க.

வாங்கினவன், விற்றவனைக் காண்பித்தால் அவனுக்குக் குற்றமில்லை.

அயலவனுடைய பொருளை விற்றவன், வாங்கினவனுக்கு விலைப்பொருளையும், அரசனுக்குத் தண்டத்தையும் கொடுக்க.

முற்றும

1. சுற்றத்தார்களினாலும்.

செல்வ முடனே திறல்காஞ்சி மன்னவனும்
அப்போது மன்னன் அருங்குறிச்சி கள்கடந்து
செப்ப முடனே திறல்காஞ்சி மன்னவன்தான்
ஏழு மலைகடந்து எட்டாம மலைதனிலே
வாழைமர மாயுள்ள மலைதனிலே காஞ்சியனும்
காயும் பழமும பறிக்கையிலே காஞ்சியனுர்
மாயக் குறத்தி மருட்டிலகப் பட்டான்காண்.
அங்கே [1] இருக்கையிலே இங்கே பிறந்ததுகாண்

### காஞ்சியனை அழைத்துவர ஏற்பாடு

அவரை யழைத்துவர ஆளனுப்பு மென்றுளே
மாதாவின் சொற்கேட்டு மைந்தனுமங் கேதுசொன்னுன்
தீதாக நானுமொன்று செப்புகிறேன் கேட்டருளீர் !
அன்னையரே கேளும் அய்யருக்கு உம்முடைய
விண்ணப்பந் தீட்டு; விரைய வெழுது மென்றுன்.
அய்யரும் நீரும் அனுதினமும் வாழ்ந்ததெல்லாம்
பொய்யெண்ணி மெய்யுரைத்துப் போதவே இப்பொழுது
உண்மை மொழியுரைத்து ஓலை எழுதிவிட்டால்
தன்மையுடன் அய்யர் சடுதியிலே வந்திடுவார்
நன்மைப் புலவரைப்போய் நானழைத்து வாறேன்காண்
மென்மையுட னேபுலவன் வெகுதீ விரம்போவான்
எழுமலையி லிருந்தாலும் இயற்புலவ னுராய்ந்து
நானே யழைத்துவரச் சொல்லுகிறேன் மாதாவே
மாதாவே யுந்தன் மகிமையெல்லாந் தானெழுதி
தூதுவன் கையில் கொடுமென்று சொன்னுனே
மலைக்கனிதே டிப்போன மன்னவனுர் காஞ்சியற்கு
சிலைநுதலா ளப்பொழுது சீட்டெழுதுஞ் சிந்தையினுல்
ஆணிப்பொன் னேலை தொழுதெடுத்தாள் ஆரணங்கும்
நேசமுடன் விக்கினவி னுயகனைத் தானினைந்து
ஆயன் தனைத்தொழுது அறுமுகனைத் தான்வாழ்த்தி
கஙகையுமை பாகனையுங் கருத்திலே தானினைந்து
மங்கையரும் பொன்னேலை மகிழ்ந்தே எழுதலுற்றுள்

### பாண்டியன் மகள் விடுக்கும் கடிதம்

மண்ணிலுள்ளோர் வாழ வையகத்தோர் வாழவென்றுள்
மின்னும்வடி வேலெறிந்த மன்னவற்கே விண்ணப்பம்

1. இருக்கிறது என்றுள்ளது.

கானக் குறத்தியுட கம்பத்தே சேர்புண்ட
மான மழிந்தருளு மன்னவற்கென் விண்ணப்பம்
ஆதரவு மேனியெலாம் அழிந்து வருந்துகிறேன்
காதலையுங் காணாத காஞ்சியற்கென் விண்ணப்பம்
காரார் குழலாருங் கன்னியருங் காணாமல்
வந்து மணிவிளக்கின் உள்ளே மறைந்திருந்து
தந்தா ரெனக்குத் தரியாத பேராசை
அன்று முதலாய் அடியேன் படுந்துயரம்
இன்று முதற் கொண்டுசொல்ல ஈராண்டு செல்லுமல்லோ
ஆசைக் கடலில் அடியேன் படுந்துயரம்
நேசத்தைத் தானினைக்கில் நெஞ்சுநெடும் புண்ணாகும்
கத்துங் குயிலுக்குங் காமசரந் தனக்கும்
நித்தந் தமியேன் நினைவு மறிவழிந்தேன்
இந்துகுலக் காஞ்சியனைப் பிரிந்தவின் நாழிகையில்
வந்தான் மதனன் [1] கருப்புச் சிலையேந்தி
அஞ்சு கணையும் அனலாகத் தானெரியும்
நஞ்சுண்ட கெண்டை யதுபோலே நானிருந்தேன்
விஞ்சுவிழி யில்லா முகம்போல் மிகமெலிந்தேன்
தஞ்சமென வொருவர் தாங்குவார் தானுமிலலை
வேழ [2] முகத்தில் விளாங்கனிபோ லாகிவிட்டேன்
வாழும் பெருமாள் மலைப்புயத்தில் சேராமல்
உங்களரு மனிதர் உறவின்முறை யெல்லோர்க்கும்
யாருமெனைப் பேசுதற்கு ஆக மிகமெலிந்தேன்
கத்துங் குயிலுக்குங் கன்னியர்கள் ஏசுதற்கும்
கோமான் தழலுக்குந் துயரமிக வாற்றேனே
திங்க ளிளமபிறைக்கும தென்ற லிளம்பிறைக்கும்
கொங்கையெல்லாம் புண்ணாகிக் குங்குமங்கள் கொப்பளிக்க
வஞ்சியர்க ளெல்லாம் வையகமே யேசுதற்கு
அஞ்சலென்பார் தானுமற்றும் அறவே மிகமெலிந்தேன்
பூபாலன் காஞ்சிப் புனக்குறத்தி யைப்புணர்ந்தால்
ஆரோதா னென்று அரசர் நகையாரோ
மன்னவனுங் காஞ்சி மலைக்குறத்தி யைப்புணர்ந்தால்
இந்நிலத்தி லுள்ள இராசா நகையாரோ
மன்னன் கருங்கூந்தல் மலைக்குறத்தி யைப்புணர்ந்தால்
தென்காஞ்சி யூரார் சிரித்து நகையாரோ

---

1. மதனைச்சிலை என்றுளது. 2. முண்ட எனல் நன்று

வாடும் பயிரில் மழையில்லா வாறதுபோல்
ஆடுந் துரும்பதுபோ லாகினேன் மன்னவனே
தேயும் பிறைபோலே சிந்தையெல்லா முள்ளுருக
வாயும் வறண்டு மனமு மிகக்கருகி
குண்டக் குறத்தி கொடியிடையாள் தன்னருகே
சென்றிருந்து கொண்டாடச் சேனை நகையாரோ
தேசத்தின் பிள்ளையுங்கள் செல்வத் திருமகனை
ஏசுகள் தான்சொல்லி ஏசுதற்கு நான்மெலிந்தேன்
இப்போது புலவனுடன் எழுந்தருளீ ராமாகில்
அப்போ திருவாணை ஆவி விடுவேன்காண் !
ஓலைகண்ட அந்நேர மெழுந்தருளீ ராமாகில்
மைந்தன் திருவாணை மாளுவது நிச்சயமே
மண்ணாளுங் காஞ்சியரே ! மாதுநல்லாள் விண்ணப்பம்
எண்ணப்ப டாத துயரமெல் லாமெழுதி
விண்ணப்ப மாக முடித்தாளே மெல்லிநல்லாள்.
மங்கையும் பொன்னோலை மைக்காப்புச் சாற்றினளே
போரா ரயில்விழியாள் [1]புத்தியினு லேயெழுதி
மஞ்சனைய கூந்தல் மடவா ளிளமுலையாள்
ஐந்துசுற்றும் சுற்றி யடைவுடனே வைத்தாளே

## கடிதம் பெற்றுப் புலவன் புறப்படுதல்

பொன்னோலை தன்னைப் புலவன் தொழுதெடுத்து
நல்லதொரு பல்லி நலநிமித்தம் சொல்லுகையால்
நெல்லு [2]மறுகு முடித்தா னியற்புலவன்
நின்ற புலவனை நேரிழையார் தானழைத்து
சென்றழைத்து வாபுலவா சிந்தாத் திரைப்பயணம்
சென்று மலையேறிச் சேதியெல்லாங் காஞ்சியற்கு
ஒன்றுபட உரைத்து உண்மையெல்லாந் தான்பேசி
பங்கமறப் பேசிப் பருவத்தால் நீரிவரை
கொங்கையென்னுங் கம்பத்தே சேர்புண்ட கோமானை
நீங்காம லேபுலவா நீருடனே கூட்டிவந்தால்
ஆங்காண புலவா அப்பர் திருவாணை
சீராருந் தண்டுகுடை செங்கனகக் காஞ்சியனும்
நானே தருவிப்பேன் நற்புலவா உந்தனுக்கு
ஆரந் தருவேன் அழகுபணி நான்தருவேன்

---

1. 'புத்தகத்தி னுலெழுதி' என்றுளது 2. 'மெருவு' என்றுள்து.

ஊரும் தருவேன் உகந்தபணி நான்தருவேன்
சிங்கார மான சிறந்தபட்டு நான்தருவேன்
ஆழி தருவேன் அரியவயல் நான்தருவேன்
ஊழியெல்லா முண்டிருக்க உடமை பலதருவேன்
இத்தன்மை சொல்லி யியற்புலவ னை அனுப்பி
எத்தன்மை யாலும் இங்கழைத்து வாபுலவா
விடைபெற்ற [1]பூசுரனும் மெல்லியலை விட்டகன்று
கொடைமிகுந்த காஞ்சியனூர் கோயில்தனை விட்டகன்று

## புலவனும் அவன் மனைவியும் உரையாடல்

சென்று புலவன் சீர்மனையா ளைஅழைத்து
என்னையின்று மாதேவி ஏவிவிட்டா ளென்றுசொன்னான்.
அந்த மொழிகேட்டு அவன்தேவி யென்சொல்வாள்
எந்தன் பிரானே யானென்று சொல்லுகிறேன்
என்னைத் தனிவைத்து இயல்வேந்தன் தன்னருகே
சன்னைசொல்லி யென்னைத் தனிவைத்துப் போனக்கால்
மன்ன னிருக்கும் மலைதனிலே நீர்போனால்
குன்றக் குறத்திகள்தான் கூடி வழிமறித்து
[2]கண்விழிக ளால்மருட்டிக் [3]காயக்கம் பண்ணியும்மை
திண்ணமுடன் தேனும் சிறுகிழங்கும் தந்துமக்கு
வார்த்தை பலமொழிந்து மாயக் குறத்திகையில
சேர்த்து வைத்துக் கொண்டுவிட்டால் திறல்வேந்தே யேதுசெய்வேன்
மன்னர் பெருமாள் மகிழ்ச்சியுள்ள காஞ்சியனை
தேச நகராண்ட திறல்வேந்தர் மன்னர்தம்மை
மயக்கும் குறத்தி மாயம் பலகலந்து
இயக்கியே காஞ்சியனை இங்குவர வொட்டாமல்
மாயக் குறத்தியிட்ட மசக்கிலகப் பட்டானே
ஆய்வதுபோல் நீரும் அகப்பட்டுக் கொண்டதுண்டால்
நானேது செய்வேனென் நல்ல பெருமாளே
ஆன புலவ னருள்வா னவனுடனே
பெண்மதியே நீயுரைத்தாய் பேதங்க ளெண்ணாதே
மதியில்லாக் காஞ்சி மலைக்குறத்தி கையிலேதான்
அதிகமாய் ஆசைகொண்ட அரசனென்று தானினைந்தால்

---

1. பூசுரன் = அந்தணன். 2. 'கணமுனிகளாய்' என்றுளது.
3. காயக்கம்-மருட்டுவித்தை.

மன்னவனைப் போலே மதியில்லையோ பெண்கொடியே
உன்னை மறந்து ஒரு நாளும் நில்லேன்காண்
பூவிற் றிருவனையாய் பூங்கமலத் தாளேகேள்
ஆவித் துணையே அணங்கேயென் றுரமுதே
செந்தாம ரைத்திருவே தேனே செழுங்கனியே!
எந்தனுயிர் அன்னமே ஏந்திழையே நீகேளாய்!
அஞ்சாதே நானுமங்கு ஒருநாளும் நில்லேன்காண்
நானும்வரு வேனென்றான் நல்ல குலக்கொடியும்
தேனுண்டு மாவுண்டு தினைமாவு மெத்தவுண்டு
போயங்கே நீர்நின்றால் போய்அழைப்பா ரிங்குமில்லை
அஞ்சாதே யென்று அரவணைத்து (க்கைய)மத்தி
செழுந்தா வடம்புனையுந் தென்காஞ்சி யை அழைத்து
உகந்தருளு முன்னேதான் வருவேன்நீ யஞ்சாதே
மஞ்சார் குழலிதலை வைக்கோல் துரும்பெடுத்து
அம்மை திருவாணை அஞ்சாதே யாரணங்கே
உம்மாணை நானு மொக்க வருவேனே
மன்னர் பணிவிடைக்கு வாணுதலே நான்போறேன்
உன்னை [1] யடைய ஒருமாதம் சென்றுவிடும்
யானை புலிகரடி அடவிகள் மெத்தவுண்டு
மான்மரைகள் சிங்கம் வரிவேங்கை யுண்டதிலே
உன்ஆணை என்ஆணை உறவின்முறை தன்னாணை
நானே வருவேன் நலங்காதே நாயகமே
சத்தியமுஞ் செய்து தலையில் அடித்துவைத்து
சித்திர மாக நடக்கத் துணிந்தானே

## வழியில் புலவன் கண்ட நிமித்தங்கள்

தொட்ட மிதியடியுந் துய்ய பசும்பிடியும்
இட்ட திருநீறும் இலங்க நடந்தானே
பாடும் புலவன் பதறி வழிநடக்கத்
தேடரிய நல்நிமித்தம் வந்துதலைப் பட்டதுவாம்
காடை யிடம்போமாம், கடிநாயிடம் போமாம்
நீடுங் கருங்குரங்கு நெடுஞ்சாரை இடம்போமாம்
[2] துட்டனி ராசாளி தொண்ட னிடம்போமாம்
அட்டையுடன் மூஞ்சூறு ஆந்தை யிடம்போமாம்
பாலாழி யாமிருகம் பன்றி இடம்போமாம்

1. நடக்க. 2. துட்டன்-தேள்.

வாலால் நெடிய வலியா னிடம்போமாம்
எத்திச் [1] சுரவி எருமை யிடம்போமாம்
போத்து வலம்போமாம் [2] புரிநா ரிடம்போமாம்
சொல்லரிய நாகம் தோற்றமாய்க் கண்டதற்பின்
நல்ல நிமித்தம் நலமாகக் கண்டதற்பின்
கன்னித் திருவழகுக் கொத்ததொரு காஞ்சியனும்
மன்னவனும் நம்முடனே வருவதுமெய் யென்றறிந்து
என்று புலவன் இலங்க வழிநடந்து
பச்சை மலையும் பவளமலை யுங்கடந்து
நச்சிவிழி மலையும் நல்லமலை யுங்கடந்து
குன்றுச்சி யுள்ள குடுவைமலை தான்கடந்தான்
பேரால் கனகமலை பெரியமலை தான்கடந்தான்
மூங்கி மலைகடந்தான் முதியமலை தான்கடந்தான்
கனகஞ் சொரிந்த [3] கஞ்ச மலைகடந்தான்
குன்று மலையுங் குவட்டோ டுளமலையும்
சென்று நடந்து திறல்புலவன் போனானே
சென்று புலவன்தான் தேடியெங்குங் காணாமல்
மன்றலணி திண்புயத்தான் மலைக்குறவர் தானிருக்கும்
குன்றக் குறவர் குடியிருப்பைக் கண்டானே.

### காஞ்சியன் இருப்பிடம் அறிதல்

அங்கிலத்தில் கண்ட குறவர் தனையழைத்து
தென்னவனூர் காஞ்சிக் குடிலேது செப்புமென்றான்.
சந்தனத்தால் கால்நாட்டிச் சாந்தகிலால் தான்சேர்த்து
சித்திரத்தால் வெண்கோட்டில் செந்நெல் தனை நிறைத்து
குங்குமத்தால் [4] வேய்ந்த குடிசையிலே இந்நேரம்
மங்கையுடன் வீற்றிருப்பான் மன்னவனு மென்றானே.
நின்ற குறவன் இயம்பிய சொற்கேட்டு
சென்று புலவனுந்தான் தேடித் தினைப்புனத்தில்
மானும் மயிலும் வனக்கிளியுந் தின்னாமல்
யோவினங்கா ளென்றசப்தம் கேட்டுத் தமிழ்ப்புலவன்
தானே நடந்து தமிழ்ப்புலவன் கண்டானே.

---

1. சுரமதி போலும்.  2. ?  3. 'கரிஞ்சேர்' என்றுளது.
4. மேய்ந்த குடியிலே என்றுளது

### காஞ்சியனிடம் கடிதத்தைக் கொடுத்தல்

கண்டளவில் காஞ்சியனை நகைத்தானே யிப்புலவன்
கொண்டுவந்த ஓலை கொடுத்தவனும் நின்றனே
ஓலை தனையெடுத்து ஒண்டொடியை விட்டகன்று
மாலைமுடிக் காஞ்சியனும் வாசித்துப் பார்த்தானே
வாசித்துப் பார்த்தவுடன் மன்னவனு மென்சொல்வான்

### காஞ்சியனின் வருத்தம்

மாயக் குறத்தி மருட்டிலகப் பட்டேன்காண்
கொங்கையெனுங் கம்பத்தே சேர்த்தாள் புனக்குறத்தி
மாயம் பலகலந்து மருந்து மிகக்கூட்டி
ஆசையினால் மெத்த அழுந்தினே னன்புலவா
பேராசை தன்னாலே பெருக மெலிந்துவிட்டேன்
மங்கையரை விட்டகன்று மாயக் குறத்திகையில்
இங்குவந்து நானும் இருந்தே னிப்புலவா
காயமெல்லா மெத்தக் கனலா யுருகிவிட்டேன்
பேசி யிருக்கப் பெருந்துணையு மற்றுவிட்டேன்
பாசியி லிருந்து பழஞ்சங்கு போலானேன்
புரிகுழலாள் வரவிட்ட பொன்னோலை வாசகத்தால்
இருதலையுங் கொள்ளி எறும்பானே னேபுலவா

### புலவனின் அறிவுரை

பன்னு தமிழ்ப்புலவன் பாண்டியனுக் கென்சொல்வான்
மின்னுங் குழலாரை விட்டகன்று பெண்ணாளும்
பொன்னான புத்திரனை விட்டிருக்கப் போமோதான்
கொத்தார் குழலாரைக் கூடி யிருந்தாலும்
மைந்தன் தனைமறக்க ஆகாது மன்னவனே

### காஞ்சியன் தன்நகரடைய புலவனிடம் யோசனைக்கேட்டல்

இந்தக் குறமாதை விட்டுநீ ரிப்போது
யோற்றும் பெருமாள் பூங்குறிச்சி மாநகரை
போற்றுந் தமிழ்ப்புலவா போமாறு செப்புமென்றான்.

### புலவனின் மதியூகம்

மன்னர் பெருமாளே மதியுரைக்கக் கேட்டருளீர்
அன்னம் படைத்த அவர்கலத்தில் நானடியேன்

கல்லு மயிருங் கலந்து மிகப்போட்டு
பொல்லா தெனவே வெறுத்துப்போ வேனடியேன்
என்னை யழைக்க எழுந்தருளு மாப்போலே
மன்னவரே பூங்குறிச்சி மாநகரே வந்தருளும்
புத்தி யெனக்கருதிப் பூழியனுங் காஞ்சியனும்
சித்திரமா கக்குறத்தி சிறுகுடியில் சென்றானே

## குறமாது சந்திப்பும் உரையாடலும்

கண்டான் குறத்திதனை கவிப்புலவன் என்சொல்வான்
வண்டார் குழலாரே வந்தேன்நா னித்தூரம்
தூர வழிநடந்து தொலையா மலையேறி
வீரப் புலிகரடி வேங்கையிருங் கானகத்தே
நடந்து வழிதொலைத்து நான்வந்தே னாயிழையே
தொடர்ந்து நடந்து தொலையா வழிதொலைத்தேன்
பதினெட்டு நாளுண்டு அடியேன் தலைமுழுகி
விதமாக எண்ணெய் தரவேண்டும் மெல்லியலே
புலவன் மொழிகேட்டுப் புனக்குறத்தி யப்போது
நலமுடன் எண்ணெய் நான்தரு வேன்புலவா
சிந்தை மகிழ்ந்து சினவேங்கைத் தோலுடுத்து
வந்து குடில்புகுந்து வாணுதலு மப்போது
வண்டணியும் பூங்குழலாள் மலைக்குறத்தி யப்பொழுது
கொண்டுவந்து எண்ணெய் அரப்புங் கொடுத்தாளே !
வாங்கிஎண்ணெய்க் காப்பை மன்னவற்குத் தான்சாற்றி
தாங்கு தமிழ்ப்புலவன் தன்தலைக்கும் தான்வார்த்து
காவி விழிப்புலவா கடுகமுழு கென்றாளே !
வாவி யறியேன் வழியறியேன் மன்னவனே
நாடறியேன் இந்த நகர்தனையும் நானறியேன்
கூட எழுந்தருளிக் குளக்கரையைக் காட்டுமென்றான்
அல்லக்கா ணிபுலவா அரைதூர மில்லையது
கொல்லைதனக் குப்பிறகே குளக்கரைகள் தானுமுண்டு
இந்த மலைகடந்து இச்சுனைக்கு மப்பாலே
அருந்தாமல் நீரும் ஆற்றங் கரைதனிலே
இப்போ கடுக முழுகிவா நீபுலவா !
மல்லனைய திண்புயத்தான் மன்னர் பெருமானே
செல்லனைய திண்புயனே சேனைமன்னர் தன்கோவே
யானை புலிகரடி அடவிகளு மெத்தவுண்டு
வெட்டிஞ லும்அடியேன் வேறே தனிப்போகேன்

எட்டுநாள் சென்ருலும் இருப்பேன் நான் இவ்விடத்தே
அந்த மொழிகேட்டு அருங்குறத்தி யென்சொல்வாள்
வந்த புலவன் வழியறியா [1] னூரறியான்
பாடுந் தமிழ்ப்புலவன் பாண்டியனைத் தானறியான்
கூட எழுந்தருளிக் குளக்கரையைக் காட்டுமென்ருள்

காஞ்சியனும் புலவனும் நீராடச் செல்லல்

குறத்தி மொழிகேட்டுக் கொற்றவனு மென்சொல்வான்
அரப்புடனே சீயக்காய் அடவுடனே தான்கொடுத்து
உற்ற புலவனுடன் சென்ருன் குளக்கரையே
மன்னவனுங் காவலனும் வாவிக்கரை மேல்வந்தான்
மன்னர் பெருமாளே விண்ணப்பங் கேட்டருளீர் !
மைந்தன் பிறந்து மகாசமத்த ுயிருப்பான்
இந்திரனும் தானும் இலலையல்லோ கண்டீரே
செந்தாம ரைப்போல இருக்கின்ற மைந்தனை நீர்
வந்தாரும் போருரும் மைந்தனையே பார்த்துநிற்பார்
பள்ளிக் கிருந்து பலநூலுங் கற்றறிந்தான்
மைந்தன் தனைமறக்க மனமெழுமோ மன்னவனே
சிவதேவி யென்னுந் திருவழகுக் கொவ்வாது
தேவி யிருக்குஞ்சிறை தேசமெல்லா மொவ்வாதே
அக்கசா லையெல்லாம் அருஞ்சிறைக ளாயிருக்கும்
நாடு நடுங்குதுகாண் நரபால பூபதியே
மாயக் குறத்திகையில் மன்னர் வரவழிந்து
தேசம் நகைத்துச் சிரிக்கஉடம் பாவர்களோ
வார்த்தையொன்று சொல்லுகிறேன் மன்னவனே நீகேளாய்
அன்னம் படைக்கும் அவர்கலத்தில் நானடியேன்
மன்னனென்று பாராமல் வார்த்தையொன்று சொல்லுகிறேன்
பொறுத்தருளும் பாண்டியனே பூபாலர் பூபதியே
அல்லக்கா ணீபுலவா அறிவல்லோ சொல்லுகிருய்
நீ செய்த பிழைகளெல்லாம் நானேபொ றுப்பேன்காண்
மாயப் புலவனுடன் மன்னன் பதிலுரைத்து
அங்கே பதிலுரைத்து அரசனுடன் காவலனும்
பொங்கி யரப்புமிட்டுப் பொய்கையிலே நீராடி
அங்கே மயிரெடுத்து ஆனகல்லுந் தான்முடிந்து
திங்கள்முடிக் காஞ்சியனும் சென்ருன் புலவனுடன்

1. "னளடியான்" என்றுளது.

## காஞ்சியனும் புலவனும் நீராடித் திரும்புதல்

மன்னவனும் பாவலனும் வந்தார் மனையிடத்தே
அன்னமிட வேண்டுமென அப்போ மலைக்குறத்தி
ஏழிசைக்கும் பாவலன்முன் இசைந்தே மலைக்குறத்தி
வாழை யிலையறுத்து வைத்தாள் புனக்குறத்தி
கைக்கு நீர்வார்த்துக் கலங்கழுவி நீர்மாற்றி
மைக்குவளைக் கண்ணாளும் வந்தமுது தான்படைத்தாள்
புலவனுக்குச் சோறுமிட்டுப் பூவைபுறங் காட்டியபின்
தலைமயிருங் கல்லும் தமிழ்ப்புலவன் தான்போட்டு
கல்லுங் கடித்தான் கருமயிருந் தானெடுத்தான்
வல்லியவள் கண்டு மனங்கலங்கி நின்றாளே
சந்தார்த் தடம்புயத்தில் தார்வேந்தன் காஞ்சியனும்
என்னரு மைப்புலவா திகைத்திருக்கக் காரணமேன்
மன்னர் பெருமாளே மயிர்கல்லு சோறுமுண்டால்
கண்காணு நாட்டடியேன் கபடமது நானறியேன்
செங்கனக ஓலையினை தேவரீர்க்கு நான்தரவே
மங்கை குறத்தி வயிராக்கிய மானாளே
இற்றைக் [1] கவதரித்தால் எல்லா வினையுமுண்டு
மன்னு மரசர்க்குக் கற்றோர் சிறப்புடையோர்
எந்நிலமும் போற்றும் இராசாக்கள் வாசலுண்டு
உன்னிடத்தி லுண்டெனக்கு ஒவ்வாது உத்தமனே

## காஞ்சியனும் புலவனும் தன் ஊர் திரும்புதல்

மெய்யாக்கி யேபுலவன் வெறுத்தவர்கள் போவதுபோல்
பொய்வார்த்தை சொல்லிப் புறப்பட்டுப் போனானே
எங்கும் புலவனைப்போய் யானழைத்து வாருமென்று
வாகுடனே காஞ்சியனார் வருந்தி யழைக்கலுற்றார்
பொற்புலவ னைத்தான் தேடிப் பிடிப்பவர்போல்
வாராய் புலவா வார்த்தைசொல்லக் கேள்புலவா
நில்லடா புலவா நான்வருமுன் போபுலவா
நில்லாய் புலவா நெடுந்தூரம் போபுலவா
வார்த்தைசொல்லக் கேள்புலவா வழிதொலையப் போபுலவா
அல்லக்கா ணீபுலவா யார்வரினும் போபுலவா
சொல்லக்கேள் நீபுலவா தொலைத்துவழி போபுலவா
பொல்லாத டாபுலவா போம்வழியே போபுலவா

---

1. கபதரித்தால் என்றுளது.

பேரடா புலவா போய்வாரும் நீபுலவா
வாடா புலவா வார்த்தைசொல்லப் பேர்புலவா
[1] பயில்பேசிக் காஞ்சியன்தான் பதறி நடந்தானே
சிங்கம் யாளி சிறந்தமலை தான்கடந்தான்
கொங்கு மலையுங் குடகுமலை யுங்கடந்தான்
பச்சை மலையும் பவளமலை யுங்கடந்தான்
கோளக வள்ளிக் கொடிமலையுந் தான்கடந்தான்
வண்ண [2]மரகதமும் வாழ்மலையுந் தான்கடந்தான்
குவட்டு மலையுங் கோடிமலை தான்கடந்தான்
செம்மலையுங் கல்மலையுஞ் சிறந்தமலை தான்கடந்தான்
நச்சுவிழி வள்ளி மலையருகே காஞ்சியனும்
நின்றுபினனே பார்த்து நெடுமூச்சுத் தானெறிந்தான்
கண்ணிழந்த ஆவின் குணமானான் காஞ்சியனும்
தார்வேந்தன் தன்முகத்தைக் கண்டு தமிழ்ப்புலவன்
வாழ்வேந்தே யஞ்சாதே மன்னவனே அஞ்சாதே
நாளை யடியேன்போய் நற்குறத்தி வாழ்மலையில்
வாளனைய கண்ணாளை வரவழைத்து நான் வருவேன்
போர்வேந்தே நானும் புரிகுழலைத் தான்கூட்டி
கொண்டுவந்து நானடியேன் குறமகளைத் தான்கூட்டி
தேர்வேந்தே வாடாதே சிந்தனைத் தேறுமென்றான்
ஒன்றுபல பேசி இரவுபக லும்நடந்தான்
சென்று வழிதொலைத்துத் தேர்வேந்தன் காஞ்சியனும்
அன்று புலவனுடன் அரியவழி தான்கடந்தான்
கொண்டுவந்து காஞ்சியனைக் கொற்றவன்தன் பட்டணத்தில்
சென்று புலவனுடன் தென்காஞ்சி யுட்புகுந்தான்.

### ஊர்வந்த செய்திகேட்டுப் பாண்டியன் மகள் செயல்

சீராருங் காஞ்சிவந்த சேதிசொன்னார் மங்கையற்கு
மாராயப் பட்டு வழங்கினாள் மாமயிலும்
ஏழாந் தளத்தில் இருந்தருளு மேந்திழைதான்
தாழ இறங்கிவந்து தமிழ்ப்புலவன் தன்னைக்கண்டு
மங்கையர்கள் நாயகிதான் மாதேவி யென்சொல்வாள்
எங்கள் பெருமான்தான் எங்கே புறப்பட்டார்
குறத்திதனை விட்டகன்று கொற்றவனார் வந்ததுதான்
பிறபுத்தி தன்னாலே விட்டகன்று வந்தார்காண்

1. —?. 2. —?.

வீரப் புலிகரடி வேங்கையுள்ள கானகத்தே
தூர வழிநடந்து தொலையா மலையேறி
வெயில்தனிலுங் கானலிலும் மெத்த மெலிந்துவிட்டேன்
பைய வழிநடந்து பாதியுடம் பாகிவிட்டேன்
அன்னங் கிடையாமல் அறவே மிகமெலிந்தேன்
மன்னவனைக் கொண்டுசென்று வந்தேனே வாழ்மயிலே
கொண்டுவந்தே னென்மேல் குறையில்லைக் கோதையரே
அண்டர் பிரானும் அடியேன்பின் வந்தார்காண்
வந்துநெடு நேரமுண்டு மன்னவனும் வாசலிலே
இந்துகுல மானே இங்கே அழைத்தருளும்
அல்லக்கா ணீபுலவா அறிவிலையோ சற்றுனக்கு
எல்லோருங் கேட்க யானொன்று சொல்லுகிறேன்
சந்தனமுஞ் சாந்தும் சவ்வா தணிந்தவற்கு
எந்தன்பா லுடனாற்றம் பொறுக்குமோ பாவலரே
சுட்ட புலித்தோல் படுத்துக் கிடந்தவற்கு
எங்கள்பட் டுடைநாற்றம் பொறுக்குமோ பாவலரே
குன்றக் குறத்தி குடியி லிருந்தவற்கு
எங்கள்செம் பொற்கோயில் சேராது காண்புலவா
வம்பக் குறத்தி மனைதனில்சோ றுண்டவற்கு
எங்கள்சம் பாவரிசி தலைதியக்கு மே புலவா
பாடி யெழுந்தபரிப் பாண்டியனார் செய்தபிழை
அடியேனுக் காகப் பொருத்தருளும் ஆரணங்கே
அல்லக்கா ணீபுலவா அழைத்தவற்குப் புத்திசொல்லும்
தோகை மயிலாரே சொன்னதெல்லா மெத்தவுண்டு
யாரை வெறுப்போம் அரசனார் செய்தபிழை
நீரே பொருத்தருளு மென்று னியற்புலவன்

## மன்னனை வரவேற்க மைந்தனை அனுப்பல்

மைந்தன் தனையழைத்து வார்விழிக்கு மையெழுதி
கச்சைகட்டி முத்தியிட்டுக் காதில் கடுக்கனிட்டு
பல்லக்கி லேற்றிப் பால்வெண்சா மரம்வீச
மூப்பிமார் தாதிமார் முன்சூழப் பின்சூழ
உங்களய்யா வந்து ஒருகாம மாச்சுதென்று
சென்றழைத்து வாருமென்னத் திருமகனை ஏவினளே

## மைந்தனின் ஐயமும் மங்கையின் தெளிவும்

என்னமொழி சொன்னால் யானேது சொல்வேன்நான்
மற்றொன்றும் சொல்லாதே மன்னன் திருமகனே

